18. துஆ கேட்பதில் எல்லை மீறக் கூடாது.

19. பிறருக்கு துஆ செய்யும் போது முதலில் தனக்கு செய்து கொள்ள வேண்டும். (ஆனால். இது கட்டாயமல்ல.)

20. அல்லாஹ்விடம் வஸீலா தேட வேண்டும். அதாவது. அவனது அழகிய பெயர்கள் மற்றும் பண்புகளைக் கொண்டு அவனைப் புகழ்ந்து கேட்பது: அல்லது தான் செய்த ஒரு நற்செயலைக் கூறிக் கேட்பது: அல்லது தனக்கருகில் உயிர் வாழும் நல்லவர் ஒருவர் தமக்காக கேட்ட துஆவைக் கூறிக் கேட்பது. உதாரணமாக. “அல்லாஹ்வே! இன்னவர் எனக்காக உன்னிடம் கேட்ட துஆவை என் விஷயத்தில் ஏற்றுக் கொள்!” என்று கேட்பது.

21. உணவு. குடிப்பு. ஆடை ஹலாலாக இருக்க வேண்டும்.

22. துஆவில் பாவமான காரியத்தையோ உறவை முறிக்கும் விஷயத்தையோ கேட்கக் கூடாது.

23. துஆ கேட்பவர் நன்மையை ஏவுபவராகவும் தீமையைத் தடுப்பவராகவும் இருக்க வேண்டும்.

24. எல்லாப் பாவங்களை விட்டும் விலகியிருக்க வேண்டும்.

## துஆ ஏற்றுக் கொள்ளப்படும் நேரங்கள், நிலைமைகள் மற்றும் இடங்கள்

1. லைலத்துல் கத்ர்.

2. இரவின் மூன்றாம் பகுதி.

3. கடமையான தொழுகைகளுக்குப் பின்.

4. அதான் - இகாமத்திற்கிடையில்!

5. ஒவ்வொரு இரவிலும் ஒரு குறிப்பிட்ட நேரம்.

6. பாங்கு சொல்லப்படும் போது!

7. மழை இறங்கும் போது!

8. அல்லாஹ்வின் பாதையில் வீரர்கள் போரைத் துவங்கும் போது!

9. வெள்ளிக்கிழமையில் ஒரு நேரம். (அந்த நேரம் மாலை நேரங்களின் இறுதி நேரமாகும் என்று பெரும்பாலான அறிஞர்கள் கூறுகின்றார்கள். சிலர், குத்பா மற்றும் ஜுமுஆத் தொழுகையுடைய நேரமென்றும் கூறுகின்றார்கள்.)

10. உண்மையான எண்ணத்துடன் ஜம்ஜம் நீரைக் குடிக்கும் போது!

11. ஸஜ்தாவில் இருக்கும் போது!

12. இரவில் தூக்கத்தை விட்டு எழும்

போது! அப்போது ஹதீஸில் கற்றுக் கொடுக்கப்பட்டுள்ள துஆவைக் கேட்க வேண்டும்.

13. உளூ செய்து தூங்குகிற நிலையில். இடையில் ஏற்படும் விழிப்பின் போது!

14. லாயிலாஹ இல்லா அன்த்த ஸுப்ஹானக்க இன்னீ குன்து மினள் ளாளிமீன். - "உன்னைத் தவிர வணக்கத்திற் குரிய இறைவன் வேறொருவனும் இல்லை. நீ மிகப் பரிசுத்தமானவன். நிச்சயமாக நானோ அநியாயக்காரர்களில் ஒருவனாகி விட்டேன்" என்று ஓதுவது!

(அல்அன்பியா 21:87)

15. மவுத்து (இறப்புச்) செய்திக்குப் பின் கேட்கும் துஆ.

16. தொழுகையின் கடைசி இருப்பில்

அத்தஹிய்யாத். ஸலவாத் ஓதியதற்குப் பின் கேட்கும் துஆ.

17. அல்லாஹ்வின் மகத்துவமிக்க பெயரைக் கூறி துஆ கேட்கும் போது! அந்த மகிமை மிக்க பெயரைக் கூறி அவனை அழைக்கும் போது அவன் அதற்குப் பதில் தருகிறான். அவனிடம் யாசிக்கும் போது அதை அவன் கொடுக்கின்றான்.

18. ஒரு முஸ்லிம் தமது முஸ்லிமான சகோதரருக்காக மறைவில் கேட்கும் போது!

19. அரஃபா அன்று அரஃபா மைதானத்தில் கேட்கும் போது!

20. ரமழான் மாதத்தில் கேட்கும் போது!

21. திக்ர் மற்றும் உபதேச சபைகளில் முஸ்லிம்கள் ஒன்றுகூடியிருக்கும் போது!

22. சோதனையான சமயங்களில்

"இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்" "அல்லாஹும்மஃஜுர்னீ ஃபீ முஸிபத்தீ வ அக்லிஃபிலீ கைரன் மின்ஹா." (நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்விற்கே சொந்தமானவர்கள்: அவன் பக்கமே நாங்கள் திரும்புகிறோம்: அல்லாஹ்வே... என் சோதனையில் எனக்கு நற்கூலி வழங்கு! எனக்குச் சிறந்ததைப் பகரமாகத் தந்திடு! என்று பிரார்த்திக்கும் போது! (ஸஹீஹ் முஸ்லிம்)

23. உள்ளத்தில் அல்லாஹ்வின் தேட்டம் அதிகமாகி முழுமையாக மனத்தூய்மை ஏற்படும் போது!

24. அநீதியிழைக்கப்பட்டவர் தமக்கு அநீதி இழைத்தவருக்கு எதிராக கேட்கும் போது!

25. தந்தை தனது மகனுக்குச் சாதகமாக

அல்லது பாதகமாக கேட்கும் போது!

26. நோன்பு வைத்திருக்கும் போது நோன்பு திறக்கும் வரை!

27. நோன்பாளி நோன்பு திறக்கும் போது!

28. நெருக்கடியான நிலையில் சிக்கிக் கொள்ளும் போது!

29. நீதமான அரசர் கேட்கும் போது!

30. பயணத்தில் இருப்பவர் கேட்கும் போது!

31. பெற்றோருக்கு உபகாரம் செய்யும் பிள்ளைகள் கேட்கும் போது!

32. உளு செய்ததற்குப் பின்பு, ஹதீஸில் கூறப்பட்ட துஆவைக் கேட்கும் போது!

33. ஹஜ்ஜில் சிறிய ஜம்ராவில் கல்லெறிந்தப் பின்!

34. ஹஜ்ஜில் நடு ஜம்ராவில் கல்லெறிந்தப் பின்!

35. கஅபாவிற்குள் கேட்கும் போது! (தற்போது கஅபா கட்டிடத்திற்கு வெளியில் வளைவாக கட்டப்பட்டுள்ள அரை மதிற்சுவருக்குள் தொழுவதும், துஆ கேட்பதும், கஅபாவிற்குள் தொழுவதும், துஆ கேட்பதுமாகவே ஆகும்.)

36. ஸஃபா மலையில்.

37. மர்வா மலையில்.

38. முஸ்தலிஃபாவில்.

39. முஃமின் - அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டவர். எங்கிருந்தாலும் எல்லா நிலைமைகளிலும் அல்லாஹ்வையே பிரார்த்தித்தவராக இருக்க வேண்டும்.

*(நபியே!) உங்களிடம் என்னுடைய*

*அடியார்கள் என்னைப் பற்றிக் கேட்டால் (அதற்கு நீங்கள் கூறுங்கள்:) "நிச்சயமாக நான் சமீபமாகவே இருக்கின்றேன். (எவரும்) என்னை அழைத்தால் அந்த அழைப்பாளரின் அழைப்புக்கு விடையளிப்பேன்." ஆதலால் அவர்கள் என்னிடமே பிரார்த்தனை செய்யவும். என்னையே நம்பிக்கை கொள்ளவும். (அதனால்) அவர்கள் நேரான வழியை அடைவார்கள்.*

*(அல்பகறா 2 : 186)*

நாம் இதுவரை குறிப்பிட்ட நேரங்கள், நிலைமைகள். இடங்கள் சற்று கூடுதல் முக்கியத்துவம் வாய்ந்தவையாக இருப்பதால் அவற்றை இங்குச் சிறப்பித்துக் கூறியுள்ளோம்.

رَبَّنَا ظَلَمْنَآ اَنْفُسَنَا وَاِنْ لَّمْ تَغْفِرْ لَنَا
وَتَرْحَمْنَا لَنَكُوْنَنَّ مِنَ الْخَاسِرِيْنَ

1. எங்கள் இறைவனே! எங்களுக்கு நாங்களே தீங்கிழைத்துக் கொண்டோம். நீ எங்களை மன்னித்து எங்களுக்கு அருள் புரியாவிட்டால் நிச்சயமாக நாங்கள் நஷ்டமடைந்தவர்களில் ஆகி விடுவோம். (அல்அஃராஃப் 7 : 23)

رَبِّ اِنِّيْ اَعُوْذُ بِكَ اَنْ اَسْاَلَكَ مَا لَيْسَ
لِيْ بِهِ عِلْمٌ وَّاِلَّا تَغْفِرْ لِيْ وَتَرْحَمْنِيْ اَكُنْ
مِّنَ الْخَاسِرِيْنَ

2. என் இறைவனே! நான் அறியாத விஷயங்களைப் பற்றி (இனி) உன்னிடம் கேட்காதபடி என்னைப் பாதுகாக்குமாறு நான் உன்னிடம் பிரார்த்திக்கிறேன். நீ என்னை மன்னித்து எனக்கு நீ கிருபை செய்யாவிட்டால் நிச்சயமாக நானும் நஷ்டமடைந்தவர்களில் ஆகிவிடுவேன்.

(ஹூது 11 : 47)

رَبِّ اغْفِرْلِيْ وَلِوَالِدَيَّ وَلِمَنْ دَخَلَ بَيْتِيَ
مُؤْمِنًا وَّلِلْمُؤْمِنِيْنَ وَالْمُؤْمِنَاتِ

3. என் இறைவனே! எனக்கும் என்னுடைய தாய் தந்தைக்கும், நம்பிக்கை கொண்டவராக என்னுடைய வீட்டில் நுழைந்தவருக்கும், (வீட்டில் நுழையாத மற்ற) நம்பிக்கை கொண்ட

ஆண்களுக்கும், நம்பிக்கை கொண்ட பெண்களுக்கும் நீ மன்னிப்பு வழங்கு!

(நூஹ் 71 : 28)

رَبَّنَا تَقَبَّلْ مِنَّآ اِنَّكَ اَنْتَ السَّمِيْعُ الْعَلِيْمُ

وَتُبْ عَلَيْنَآ اِنَّكَ اَنْتَ التَّوَّابُ الرَّحِيْمُ

4.எங்களுடைய இறைவனே! (உனக்காக நாங்கள் செய்த அமல்களை) எங்களிடமிருந்து ஏற்றுக்கொள்! நிச்சயமாக நீ (எங்களுடைய இந்தப் பிரார்த்தனையைச்) செவியுறுபவனாகவும் அறிந்தவனாகவும் இருக்கின்றாய். எங்களை நீ மன்னித்திடு! நிச்சயமாக நீ மிக மன்னிப்பவனும், நிகரற்ற அன்புடையவனுமாக இருக்கின்றாய்.

(அல்பகறா 2 : 127, 128)

رَبِّ اجْعَلْنِي مُقِيمَ الصَّلَوٰةِ وَمِنْ ذُرِّيَّتِي
رَبَّنَا وَتَقَبَّلْ دُعَآءِ

5. என் இறைவனே! என்னையும், என் சந்ததிகளையும் (உன்னைத்) தொழுது வருபவர்களாக ஆக்கி வை. எங்கள் இறைவனே! மேலும் என்னுடைய பிரார்த்தனையை அங்கீகரித்துக் கொள்!

(இப்ராஹீம் 14 : 40)

رَبَّنَا اغْفِرْلِي وَلِوَالِدَيَّ وَلِلْمُؤْمِنِينَ يَوْمَ
يَقُوْمُ الْحِسَابُ

6. எங்கள் இறைவனே! எனக்கும், என் தாய் தந்தைக்கும், மற்ற நம்பிக்கையாளர்

களுக்கும் கேள்வி கணக்குக் கேட்கும் (மறுமை) நாளில் மன்னிப்பு அளித்திடு!

(இப்ராஹீம் 14 : 41)

رَبِّ هَبْ لِي حُكْمًا وَّأَلْحِقْنِي بِالصَّالِحِيْنَ

وَاجْعَلْ لِّي لِسَانَ صِدْقٍ فِي الْاٰخِرِيْنَ وَاجْعَلْنِي

مِنْ وَرَثَةِ جَنَّةِ النَّعِيْمِ وَلَا تُخْزِنِي يَوْمَ يُبْعَثُوْنَ

7. என் இறைவனே! நீ எனக்கு ஞானத்தைத் தா! மேலும் நல்லோர்களுடன் என்னைச் சேர்த்து வை! பிற்காலத்தில் தோன்றுவோருக்கிடையில் எனக்கு நற்பெயரையும் சிறப்பையும் தா! இன்பச் சுகத்தையுடைய சுவனபதியை சொந்தம் கொள்பவர்களிலும் என்னை நீ ஆக்கி வை! (உயிர் கொடுத்து) எழுப்பப்

படும் (மறுமை) நாளில் நீ என்னை இழிவுக்குள்ளாக்காதே!

(அஷ்ஷுஅறா 26 : 82-87)

رَبِّ هَبْ لِيْ مِنَ الصَّالِحِيْنَ

8. என் இறைவனே! நல்லோர்களில் (ஒருவரை) நீ எனக்கு(ச் சந்ததியாக) வழங்கு! (அஸ்ஸாஃப்ஃபாத் 37 : 100)

رَبَّنَا عَلَيْكَ تَوَكَّلْنَا وَاِلَيْكَ اَنَبْنَا

وَاِلَيْكَ الْمَصِيْرُ

9. எங்கள் இறைவனே! உன்னையே நாங்கள் நம்பினோம். உன் பக்கமே நாங்கள் திரும்பிவிட்டோம். உன்னிடமே (நாங்கள் அனைவரும்) வரவேண்டிய

திருக்கின்றது (அல்மும்தஹினா 60 : 4)

رَبَّنَا لَا تَجْعَلْنَا فِتْنَةً لِّلَّذِيْنَ كَفَرُوْا وَاغْفِرْ

لَنَا رَبَّنَآ اِنَّكَ اَنْتَ الْعَزِيْزُ الْحَكِيْمُ

10. எங்கள் இறைவனே! எங்களை நீ நிராகரிப்பவர்களின் துன்பத்திற்குள்ளாக்கி விடாதே! எங்களை நீ மன்னித்திடு! நிச்சயமாக நீதான் (அனைவரையும்) மிகைத்தவனும் ஞானமுடையவனும் ஆவாய். (அல்மும்தஹினா 60 : 5).

رَبِّ اَوْزِعْنِي اَنْ اَشْكُرَ نِعْمَتَكَ الَّتِيْ

اَنْعَمْتَ عَلَيَّ وَعَلٰى وَالِدَيَّ وَاَنْ اَعْمَلَ

صَالِحًا تَرْضَاهُ وَاَدْخِلْنِيْ بِرَحْمَتِكَ فِيْ عِبَادِكَ الصَّالِحِيْنَ

11. என் இறைவனே! நீ என் மீதும், என் தாய் தந்தை மீதும் புரிந்த உன்னுடைய அருள்களுக்கு உனக்கு நான் நன்றி செலுத்த நீ அருள்புரி! உனக்குத் திருப்தியளிக்கக்கூடிய நற்செயல்களையும் நான் செய்ய(க் கூடிய பாக்கியத்தை எனக்கு) அருள் புரிந்து, உன்னுடைய கிருபையைக் கொண்டு உன்னுடைய நல்லடியார்களுடனும் என்னைச் சேர்த்து விடு! (அன்னம்லு 27 : 19)

رَبِّ هَبْ لِيْ مِنْ لَّدُنْكَ ذُرِّيَّةً طَيِّبَةً اِنَّكَ

سَمِيْعُ الدُّعَآءِ

12. என் இறைவனே! உன் புறத்திலிருந்து எனக்கு நல்ல சந்ததியை அளித்திடு! நிச்சயமாக நீ பிரார்த்தனைகளைச் செவியேற்பவனாக இருக்கின்றாய்!

(ஆலுஇம்ரான் 3 : 38)

رَبِّ لَا تَذَرْنِيْ فَرْدًا وَّاَنْتَ خَيْرُ الْوَارِثِيْنَ

13. என் இறைவனே! நீ என்னை(ச் சந்ததியற்ற) தனித்தவனாக ஆக்கிவிடாதே! நீயோ வாரிசுதாரர்களில் மிக்க மேலானவன். (அல்அன்பியா 21 : 89)

لَآ اِلٰهَ اِلَّا اَنْتَ سُبْحَانَكَ اِنِّيْ كُنْتُ مِنَ الظّٰلِمِيْنَ

14. உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய

இறைவன் வேறு எவரும் இல்லை. நீ மிகப் பரிசுத்தமானவன். நிச்சயமாக நானோ அநியாயக்காரர்களில் ஒருவனாகி விட்டேன். (என்னை மன்னித்து அருள்புரி!)

(அல்அன்பியா 21 : 87)

رَبِّ اشْرَحْ لِيْ صَدْرِي وَيَسِّرْ لِيْ اَمْرِى
وَاحْلُلْ عُقْدَةً مِّنْ لِّسَانِيْ يَفْقَهُوْا قَوْلِيْ

15. என் இறைவனே... என் உள்ளத்தை(த் திடப்படுத்தி) விரிவாக்கு! (நான் செய்ய வேண்டிய) காரியங்களை எனக்குச் சுலபமாக்கி வை! என் நாவிலுள்ள (கொண்ணல்) முடிச்சை அவிழ்த்து விடு! என் வார்த்தையை (மக்கள்) விளங்கிக் கொள்வார்கள். (தாஹா 20 : 25-28)

رَبِّ اِنِّيْ ظَلَمْتُ نَفْسِيْ فَاغْفِرْلِيْ

16. என் இறைவனே... நிச்சயமாக நான் எனக்கே தீங்கிழைத்துக் கொண்டேன். நீ எனக்கு மன்னிப்பு வழங்கு!

(அல்கஸஸ் 28 : 16)

رَبَّنَا اٰمَنَّا بِمَآ اَنْزَلْتَ وَاتَّبَعْنَا الرَّسُوْلَ

فَاكْتُبْنَا مَعَ الشَّاهِدِيْنَ

17. எங்கள் இறைவனே! நீ இறக்கியதை நாங்கள் நம்புகின்றோம். (உன்னுடைய) இத்தூதரையும் நாங்கள் பின்பற்றி நடக்கின்றோம். ஆதலால், (அவரை) உண்மைப்படுத்தியவர்களுடன் எங்களையும் நீ பதிவு செய்து கொள்!

(ஆலு இம்ரான் 3 : 53)

رَبَّنَا لَا تَجْعَلْنَا فِتْنَةً لِّلْقَوْمِ الظَّالِمِيْنَ

وَنَجِّنَا بِرَحْمَتِكَ مِنَ الْقَوْمِ الْكَافِرِيْنَ

*18. எங்கள் இறைவனே! நீ எங்களை அநியாயம் செய்யும் மக்களின் துன்புறுத்தலுக்கு உள்ளாக்கிவிடாதே! எங்கள் இறைவனே! நிராகரிக்கும் மக்களிடமிருந்து உன் அருளைக் கொண்டு நீ எங்களைப் பாதுகாத்துக் கொள்! (யூனுஸ் 10 : 85, 86)*

رَبَّنَا اغْفِرْ لَنَا ذُنُوْبَنَا وَاِسْرَافَنَا فِيْ اَمْرِنَا

وَثَبِّتْ اَقْدَامَنَا وَانْصُرْنَا عَلَى الْقَوْمِ الْكَافِرِيْنَ

*19. எங்கள் இறைவனே! எங்கள்*

பாவங்களை எங்களுக்கு நீ மன்னித்துவிடு! எங்கள் செயல்களில் நாங்கள் வரம்பு மீறிய (குற்றத்)தையும் மன்னித்துவிடு! எங்கள் பாதங்களை (போரில் நழுவாது) நீ உறுதிப்படுத்தியும் வை! (உன்னை) நிராகரிக்கும் மக்களை வெற்றி பெற நீ எங்களுக்கு உதவிசெய்!

(ஆலுஇம்ரான் 3 : 147)

رَبَّنَآ اٰتِنَا مِنْ لَّدُنْكَ رَحْمَةً وَّهَيِّئْ لَنَا مِنْ اَمْرِنَا رَشَدًا

20. எங்கள் இறைவனே! உன் அருளை எங்களுக்கு அளித்திடு! நீ எங்களுக்கு நேரான வழியையும் சுலபமாக்கிடு!

(அல்கஹ்ஃப் 18 : 10)

رَبِّ زِدْنِي عِلْمًا

21. என் இறைவனே! என்னுடைய கல்வி ஞானத்தை மேன்மேலும் அதிகப்படுத்து! (தாஹா 20 : 114)

رَبِّ اَعُوْذُ بِكَ مِنْ هَمَزَاتِ الشَّيَاطِيْنِ وَاَعُوْذُ بِكَ رَبِّ اَنْ يَحْضُرُوْنِ

22. என் இறைவனே! (பாவமான காரியங்களைச் செய்யும்படித் தூண்டும்) ஷைத்தான்களுடைய தூண்டுதல்களை விட்டு நான் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன். மேலும், என் இறைவனே! ஷைத்தான்கள் என்னிடம் வருவதை விட்டு நான் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன். (அல்முஃமினூன் 23: 97,98)

رَبِّ اغْفِرْ وَارْحَمْ وَاَنْتَ خَيْرُ الرَّاحِمِيْنَ

23. என் இறைவனே... நீ (என்னை) மன்னித்துவிடு! (எனக்கு) கிருபை செய்! கிருபை செய்பவர்களிலெல்லாம் நீதான் மிக்க மேலானவன்.

(அல்முஃமினூன் 23 : 118)

رَبَّنَآ اٰتِنَا فِى الدُّنْيَا حَسَنَةً وَّفِى الْاٰخِرَةِ حَسَنَةً وَّقِنَا عَذَابَ النَّارِ

24. எங்கள் இறைவனே! எங்களுக்கு நீ இம்மையிலும் அழகியதைத் தா! மறுமையிலும் அழகியதைத் தா! (நரக) நெருப்பின் வேதனையைவிட்டு எங்களை நீ பாதுகாத்துக்கொள்! (அல்பகறா 2 : 201)

سَمِعْنَا وَاَطَعْنَا غُفْرَانَكَ رَبَّنَا وَاِلَيْكَ الْمَصِيْرُ

25. எங்கள் இறைவனே! (உன் வசனங்களை) நாங்கள் செவியுற்றோம். (உன் கட்டளைக்கு) நாங்கள் கட்டுப்பட்டோம். நாங்கள் உனது மன்னிப்பைக் கோருகின்றோம். உன்னிடமேதான் (நாங்கள்) சேரவேண்டியதிருக்கின்றது.

(அல்பகறா 2:285)

رَبَّنَا لَا تُؤَاخِذْنَآ اِنْ نَّسِيْنَآ اَوْ اَخْطَأْنَا رَبَّنَا وَلَا تَحْمِلْ عَلَيْنَآ اِصْرًا كَمَا حَمَلْتَهُ عَلَى الَّذِيْنَ مِنْ قَبْلِنَا رَبَّنَا وَلَا تُحَمِّلْنَا مَا لَا طَاقَةَ

لَنَا بِهِ وَاعْفُ عَنَّا وَاغْفِرْ لَنَا وَارْحَمْنَآ اَنْتَ

مَوْلَانَا فَانْصُرْنَا عَلَى الْقَوْمِ الْكَافِرِيْنَ

26. எங்கள் இறைவனே! நாங்கள் (எங்கள் கடமைகளைச் செய்ய) மறந்து விட்டாலும் அல்லது அதில் தவறிழைத்து விட்டாலும் அதைப் பற்றி நீ எங்களை (குற்றம்) பிடிக்காதே! எங்கள் இறைவனே! நீ எங்கள் மீது (கடினமான கட்டளைகளை விதித்து) பளுவான சுமையைச் சுமத்தி விடாதே. எங்களுக்கு முன்னிருந்தவர்கள் மீது (கடினமான கட்டளைகளை) நீ சுமத்தியவாறு (சுமத்தாதே!) எங்கள் இறைவனே! நாங்கள் தாங்க முடியாத கஷ்டங்களை எங்கள் மீது சுமத்தி விடாதே! எங்கள் (குற்றங்களை)

அழித்திடு! எங்களை மன்னித்திடு! எங்கள் மீது கருணை புரிந்திடு! நீதான் எங்கள் இறைவன்! ஆகவே (உன்னை) நிராகரிக்கும் கூட்டங்கள் மீது (வெற்றி பெற) நீ எங்களுக்கு உதவி புரிந்திடு!

(அல்பகறா 2 : 286)

رَبَّنَا لَا تُزِغْ قُلُوْبَنَا بَعْدَ اِذْ هَدَيْتَنَا وَهَبْ لَنَا مِنْ لَّدُنْكَ رَحْمَةً اِنَّكَ اَنْتَ الْوَهَّابُ

27. எங்கள் இறைவனே! நீ எங்களுக்கு நேரான வழியை அறிவித்ததன் பின்னர் எங்களுடைய உள்ளங்கள் (அதிலிருந்து) தவறிவிடுமாறு செய்யாதே. உன் (அன்பான) அருளையும் எங்களுக்கு அளித்திடு! நிச்சயமாக நீயே பெரும் கொடையாளி! (ஆலு இம்ரான் 3 : 8)

رَبَّنَا مَا خَلَقْتَ هٰذَا بَاطِلاً سُبْحَانَكَ فَقِنَا

عَذَابَ النَّارِ رَبَّنَآ اِنَّكَ مَنْ تُدْخِلِ النَّارَ

فَقَدْ اَخْزَيْتَهُ وَمَا لِلظَّالِمِيْنَ مِنْ اَنْصَارٍ رَبَّنَآ

اِنَّنَا سَمِعْنَا مُنَادِيًا يُنَادِيْ لِلْاِيْمَانِ اَنْ اٰمِنُوْا

بِرَبِّكُمْ فَاٰمَنَّا رَبَّنَا فَاغْفِرْ لَنَا ذُنُوْبَنَا وَكَفِّرْ عَنَّا

سَيِّاٰتِنَا وَتَوَفَّنَا مَعَ الْاَبْرَارِ رَبَّنَا وَاٰتِنَا مَا

وَعَدْتَّنَا عَلٰى رُسُلِكَ وَلَا تُخْزِنَا يَوْمَ

الْقِيَامَةِ اِنَّكَ لَا تُخْلِفُ الْمِيْعَادَ

28. எங்கள் இறைவனே! நீ இவற்றை வீணாகப் படைக்கவில்லை. நீ மிகத் தூயவன். (நரக) நெருப்பின் வேதனையை விட்டு எங்களை நீ காப்பாற்று! எங்கள் இறைவனே! நிச்சயமாக நீ எவர்களை (நரக) நெருப்பில் நுழைத்து விட்டாயோ அவர்களை நிச்சயமாக நீ இழிவுபடுத்தி விட்டாய். (அத்தகைய) அநியாயக்காரர் களுக்கு உதவி செய்பவர்கள் (ஒருவரும்) இல்லை. எங்கள் இறைவனே! (உன் தூதரின்) அழைப்பை நாங்கள் நிச்சயமாக செவியுற்றோம். (அவர்) எங்களை நம்பிக்கையின் பக்கம் அழைத்து 'உங்கள் இறைவனை நம்பிக்கை கொள்ளுங்கள்' என்று கூறினார். நாங்களும் (அவ்வாறே) நம்பிக்கை கொண்டோம். ஆதலால் எங்கள் இறைவனே! நீ எங்கள்

குற்றங்களை மன்னித்துவிடு! எங்கள் பாவங்களை எங்களை விட்டும் அகற்றிடு! (முடிவில்) நல்லோர்களுடன் எங்களை மரணிக்கும்படிச் செய்! எங்கள் இறைவனே! உன் தூதர்கள் மூலம் எங்களுக்கு நீ வாக்களித்ததை எங்களுக்குத் தா! மறுமை நாளில் நீ எங்களை இழிவுபடுத்திவிடாதே! நிச்சயமாக நீ வாக்குறுதி தவறுபவனல்ல.

(ஆலு இம்ரான் 3: 191-194)

رَبَّنَآ اٰمَنَّا فَاغْفِرْ لَنَا وَارْحَمْنَا وَاَنْتَ خَيْرُ الرَّاحِمِيْنَ ،

29. எங்கள் இறைவனே! நாங்கள் (உன்னை) நம்பிக்கை கொண்டோம். நீ எங்களுக்கு மன்னிப்பு வழங்கு! எங்கள்

மீது அருள் புரி! அருள்புரிபவர்களி லெல்லாம் நீ மிக்க மேலானவன்.
(அல்முஃமினூன் 23: 109)

رَبَّنَا اصْرِفْ عَنَّا عَذَابَ جَهَنَّمَ إِنَّ عَذَابَهَا

كَانَ غَرَامًا اِنَّهَا سَآئَتْ مُسْتَقَرًّا وَّمُقَامًا

30. எங்கள் இறைவனே! நரகத்தின் வேதனையை எங்களை விட்டு தடுத்துக் கொள்! ஏனென்றால், நிச்சயமாகஅதன் வேதனை நிலையான துன்பமாகும். சிறிது நேரமோ அல்லது எப்பொழுதுமோ தங்குவதற்கும் அது மிகக் கெட்ட இடமாகும். (அல்ஃபுர்கான் 25 : 65, 66)

رَبَّنَا هَبْ لَنَا مِنْ اَزْوَاجِنَا وَذُرِّيَّاتِنَا قُرَّةَ

اَعْيُنٍ وَاجْعَلْنَا لِلْمُتَّقِيْنَ اِمَامًا

31. எங்கள் இறைவனே! எங்கள் மனைவிகள் மூலமாகவும், எங்கள் பிள்ளைகள் மூலமாகவும் எங்களுக்குக் கண் குளிர்ச்சியைத் தா! மேலும், இறையச்சமுள்ளவர்களுக்கு வழிகாட்டியாக எங்களை ஆக்கு!

(அல்ஃபுர்கான் 25 : 74)

رَبِّ اَوْزِعْنِيْ اَنْ اَشْكُرَ نِعْمَتَكَ الَّتِيْ

اَنْعَمْتَ عَلَيَّ وَعَلٰى وَالِدَيَّ وَاَنْ اَعْمَلَ

صَالِحًا تَرْضَاهُ وَاَصْلِحْ لِيْ فِيْ ذُرِّيَّتِيْ اِنِّيْ

تُبْتُ اِلَيْكَ وَاِنِّيْ مِنَ الْمُسْلِمِيْنَ

32. என் இறைவனே! நீ என் மீதும், என் தாய் தந்தை மீதும் புரிந்த அருளுக்காக உனக்கு நான் நன்றி செலுத்துவதற்கும், உன்னுடைய திருப்தியை அடையக்கூடிய நற்செயல்களைச் செய்வதற்கும் நீ என்னைச் சீர்படுத்து! எனக்கு உதவியாக இருக்கும்படி என்னுடைய குடும்பத்தைச் சீர்திருத்தி வை. நிச்சயமாக நான் உன் பக்கமே திரும்பி விட்டேன். (உனக்கு) முற்றிலும் கீழ்ப்படிந்தவர்களில் நானும் ஒருவன். (அல்அஹ்காஃப் 46:15)

رَبَّنَا اغْفِرْ لَنَا وَلِإِخْوَانِنَا الَّذِيْنَ سَبَقُوْنَا

بِالْإِيْمَانِ وَلَا تَجْعَلْ فِيْ قُلُوْبِنَا غِلًّا لِّلَّذِيْنَ

امَنُوا رَبَّنَا اِنَّکَ رَؤُوْفٌ رَحِيْمٌ

"எங்கள் இறைவனே... எங்களையும் நீ மன்னித்தருள்! எங்களுக்கு முன் ஈமான் கொண்ட எங்களுடைய சகோதரர்களையும் மன்னித்தருள்! ஈமான் கொண்டவர்களைப் பற்றி எங்களுடைய உள்ளங்களில் குரோதங்களை ஏற்படுத்தி விடாதே! எங்கள் இறைவனே! நிச்சயமாக நீ மிகக் கிருபையுடையவனும், இரக்கமுடையவனுமாக இருக்கின்றாய்!

(அல்ஹஷ்ர் 59 : 10)

رَبَّنَآ اَتْمِمْ لَنَا نُوْرَنَا وَاغْفِرْ لَنَا اِنَّكَ عَلٰى

كُلِّ شَىْءٍ قَدِيْرٌ

34. எங்கள் இறைவனே! எங்களுக்கு, எங்களுடைய பிரகாசத்தை (அணையாது) நீ பரிபூரணமாக்கி வை! எங்களுக்கு மன்னிப்பு வழங்கு! நிச்சயமாக நீ அனைத்துப் பொருட்களின் மீதும் பேராற்றலுடையவன் (அத்தஹ்ரீம் 66 : 8)

رَبَّنَآ إِنَّنَآ آمَنَّا فَاغْفِرْ لَنَا ذُنُوبَنَا وَقِنَا عَذَابَ النَّارِ

35. எங்கள் இறைவனே! நிச்சயமாக நாங்கள் நம்பிக்கை கொண்டோம். ஆகவே, நீ எங்களுக்கு எங்களுடைய பாவங்களை மன்னித்துவிடு! (நரக) நெருப்பின் வேதனையைவிட்டு எங்களைக் காப்பாற்று!

(ஆலு இம்ரான் 3:16)

رَبَّنَا آمَنَّا فَاكْتُبْنَا مَعَ الشَّاهِدِيْنَ

36. எங்கள் இறைவனே! நாங்கள் நம்பிக்கை கொண்டோம். ஆகவே, சாட்சி கூறுபவர்களுடன் எங்களையும் நீ பதிவு செய்து கொள்! (அல்மாயிதா 5:83)

رَبِّ اجْعَلْ هٰذَا الْبَلَدَ اٰمِنًا وَّاجْنُبْنِيْ وَبَنِيَّ

اَنْ نَّعْبُدَ الْاَصْنَامَ

37. என் இறைவா... இந்த ஊரை பாதுகாப்புடையதாக ஆக்கி வை! சிலைகளை வணங்குவதைவிட்டு என்னையும் என் சந்ததிகளையும் தூரமாக்கி வை! (இப்ராஹீம் 14 : 35)

رَبِّ اِنِّيْ لِمَا اَنْزَلْتَ اِلَيَّ مِنْ خَيْرٍ فَقِيْرٌ

38. என் இறைவனே! நீ எனக்குத் தரும்

எந்த நன்மையாயினும் சரி, நிச்சயமாக நான் அதற்கு மிகத் தேவையுள்ளவனாகவே இருக்கிறேன்.

(அல்கஸஸ் 28 : 24)

رَبِّ انْصُرْنِيْ عَلَى الْقَوْمِ الْمُفْسِدِيْنَ

39. என் இறைவனே! விஷமம் செய்யும் மக்களுக்கு எதிராக எனக்கு உதவி செய்!

(அல்அன்கபூத் 29 : 30)

رَبَّنَا لَا تَجْعَلْنَا مَعَ الْقَوْمِ الظّٰلِمِيْنَ

40. எங்கள் இறைவனே! அநியாயக்கார மக்களுடன் (நரகத்தில்) எங்களையும் சேர்த்து விடாதே! (அல்அஃராஃப் 7 : 47)

حَسْبِيَ اللّٰهُ لَآ اِلٰهَ اِلَّا هُوَ عَلَيْهِ تَوَكَّلْتُ

وَهُوَ رَبُّ الْعَرْشِ الْعَظِيمِ

41 அல்லாஹ்தான் எனக்குப் போதுமானவன்; அவனைத் தவிர வணக்கத்திற்குரிய வேறு இறைவன் அறவே இல்லை; என் காரியங்கள் அனைத்தையும் அவனிடமே நான் ஒப்படைத்து விட்டேன்; அவன்தான் மகத்தான 'அர்ஷின்' அதிபதி.

(அத்தவ்பா 9 : 129)

عَسَىٰ رَبِّيٓ أَنْ يَهْدِيَنِي سَوَآءَ السَّبِيلِ

42. என் இறைவன் நேரான வழியை எனக்கு அறிவிப்பான். (அல்கஸஸ் 28:22)

رَبِّ نَجِّنِي مِنَ الْقَوْمِ الظَّالِمِينَ

43. என் இறைவனே! அக்கிரமக்கார மக்களிடமிருந்து நீ என்னைப் பாதுகாத்துக் கொள்! (அல்கஸஸ் 28 : 21)

رَبِّ ابْنِ لِيْ عِنْدَكَ بَيْتًا فِى الْجَنَّةِ

44. என் இறைவனே! உன்னிடத்தில் உள்ள சுவனபதியில் எனக்கு ஒரு வீட்டை அமைத்துக் கொடு!

(அத்தஹ்ரீம் 66 : 11)

اَللّٰهُمَّ اٰتِنَا فِى الدُّنْيَا حَسَنَةً وَفِى الْاٰخِرَةِ

حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّارِ

45. அல்லாஹ்வே... இவ்வுலகத்திலும் எங்களுக்கு அழகியதைக் கொடு! மறுமையிலும் அழகியதைக் கொடு! நரக

நெருப்பின் வேதனையை விட்டு எங்களைப் பாதுகாத்துக் கொள்!

(ஸஹீஹுல் புகாரி)

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُبِكَ مِنْ فِتْنَةِ النَّارِ

وَعَذَابِ النَّارِ وَفِتْنَةِ الْقَبْرِ وَعَذَابِ الْقَبْرِ

وَشَرِّ فِتْنَةِ الْغِنٰى وَشَرِّ فِتْنَةِ الْفَقْرِ اَللّٰهُمَّ اِنِّيْ

اَعُوْذُ بِكَ مِنْ شَرِّ فِتْنَةِ الْمَسِيْحِ الدَّجَّالِ

اَللّٰهُمَّ اغْسِلْ قَلْبِيْ بِمَاءِ الثَّلْجِ وَالْبَرَدِ وَنَقِّ

قَلْبِيْ مِنَ الْخَطَايَا كَمَا نَقَّيْتَ الثَّوْبَ

الْاَبْيَضَ مِنَ الدَّنَسِ وَبَاعِدْ بَيْنِيْ وَبَيْنَ

خَطَايَايَ كَمَا بَاعَدْتَ بَيْنَ الْمَشْرِقِ
وَالْمَغْرِبِ اَللّٰهُمَّ إِنِّيْ اَعُوْذُبِكَ مِنَ
الْكَسَلِ وَالْمَأْثَمِ وَالْمَغْرَمِ

46. அல்லாஹ்வே! நரக நெருப்பின் சோதனையை விட்டும். நரக நெருப்பின் வேதனையை விட்டும். கப்ரின் சோதனையை விட்டும். கப்ரின் வேதனையை விட்டும். செல்வத்தால் ஏற்படும் குழப்பத்தின் தீங்கை விட்டும். வறுமையால் ஏற்படும் குழப்பத்தின் தீங்கை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். அல்லாஹ்வே! மஸீஹ் தஜ்ஜால் மூலம் ஏற்படும் குழப்பத்தின் தீங்கை விட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

அல்லாஹ்வே... பனிக்கட்டியைக் கொண்டும் ஆலங்கட்டியைக் கொண்டும் எனது உள்ளத்தைக் கழுவிவிடு! வெண்மையான ஆடையை அழுக்கை விட்டு நீ சுத்தப் படுத்தியது போன்று குற்றங்களை விட்டு என் உள்ளத்தைச் சுத்தப்படுத்திவிடு! கிழக்கிற்கும் மேற்கிற்குமிடையில் நீ தூரத்தை ஏற்படுத்தியதைப் போன்று எனக்கும் எனது குற்றங்களுக்குமிடையில் தூரத்தை ஏற்படுத்திவிடு! அல்லாஹ்வே! சோம்பேறித்தனம், பாவம், கடன் ஆகிய அனைத்தை விட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

(ஸஹீஹுல் புகாரி)

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُ بِكَ مِنَ الْعَجْزِ وَالْكَسَلِ

وَالْجُبْنِ وَالْهَرَمِ وَالْبُخْلِ وَاَعُوْذُ بِكَ مِنْ

عَذَابِ الْقَبْرِ وَمِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ

47. அல்லாஹ்வே! பலவீனம், சோம்பேறித்தனம். கோழைத்தனம், வயோதிகம். கஞ்சத்தனம் ஆகிய அனைத்தை விட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். கப்ரின் வேதனையை விட்டும். வாழ்க்கை மற்றும் மரணத்தில் ஏற்படும் குழப்பத்தை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

(ஸஹீஹுல் புகாரி)

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُبِكَ مِنْ جَهْدِالْبَلاَءِ

وَدَرَكِ الشَّقَاءِ وَسُوْءِ الْقَضَاءِ وَشَمَاتَةِ الْاَعْدَاءِ

48.அல்லாஹ்வே! கடினமான சோதனையை

விட்டும், கெடுதிகள் பீடிப்பதை விட்டும், விதிக்கப்பட்டதின் தீமையை விட்டும், எதிரிகளின் நகைப்பை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (ஸஹீஹுல் புகாரி)

اَللّٰهُمَّ اَصْلِحْ لِيْ دِيْنِيَ الَّذِيْ هُوَ عِصْمَةُ اَمْرِيْ وَاَصْلِحْ لِيْ دُنْيَايَ الَّتِىْ فِيْهَا مَعَاشِيْ وَاَصْلِحْ لِيْ اٰخِرَتِىَ الَّتِيْ فِيْهَا مَعَادِيْ وَاجْعَلِ الْحَيَاةَ زِيَادَةً لِّيْ فِيْ كُلِّ خَيْرٍ وَاجْعَلِ الْمَوْتَ رَاحَةً لِّيْ مِنْ كُلِّ شَرٍّ

49. அல்லாஹ்வே... எனது காரியத்திற்குப் பாதுகாப்பாக இருக்கும் மார்க்கத்தை

எனக்கு நீ சீர்ப்படுத்தித் தா! நான் வாழும் உலகத்தை எனக்கு சீர்ப்படுத்தித் தா! நான் மீள இருக்கும் மறுமையை எனக்குச் சீர்ப்படுத்தித் தா! வாழ்க்கையை, நான் நன்மைகளை அதிகரித்துக் கொள்ள ஏற்றதாக ஆக்கு! மரணத்தை, எனக்கு தீமையை விட்டு ஓய்வாக ஆக்கு!

(ஸஹீஹ் முஸ்லிம்)

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْاَلُكَ الْهُدٰى وَالتُّقٰى

وَالْعَفَافَ وَالْغِنٰى

50. அல்லாஹ்வே! நேர்வழி, உனது பயம், பத்தினித்தனம், செல்வம் ஆகிய அனைத்தையும் நிச்சயமாக நான் உன்னிடமே கேட்கிறேன்.

(ஸஹீஹ் முஸ்லிம்)

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُ بِكَ مِنَ الْعَجْزِ وَالْكَسَلِ
وَالْجُبْنِ وَالْبُخْلِ وَالْهَرَمِ وَعَذَابِ الْقَبْرِ
اَللّٰهُمَّ اٰتِ نَفْسِيْ تَقْوَاهَا وَزَكِّهَا اَنْتَ خَيْرُ
مَنْ زَكَّاهَا اَنْتَ وَلِيُّهَا وَمَوْلَاهَا اَللّٰهُمَّ اِنِّيْ
اَعُوْذُبِكَ مِنْ عِلْمٍ لَّا يَنْفَعُ وَمِنْ قَلْبٍ لَّا
يَخْشَعُ وَمِنْ نَّفْسٍ لَّا تَشْبَعُ وَمِنْ دَعْوَةٍ لَّا
يُسْتَجَابُ لَهَا

51. அல்லாஹ்வே! பலவீனம், சோம்பேறித் தனம், கோழைத்தனம், கஞ்சத்தனம், வயோதிகம், கப்ரின் வேதனை ஆகிய

அனைத்தையும் விட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். அல்லாஹ்வே! என் உள்ளத்திற்கு அதற்குரிய பயத்தைக் கொடு! அதை நீ தூய்மைப்படுத்து! நீயே அதை மிகச் சிறந்த முறையில் தூய்மைப்படுத்துபவன். நீயே அதன் பாதுகாவலன்; அதன் எஜமானன். அல்லாஹ்வே! பயனற்றக் கல்வியை விட்டும், பயமற்ற உள்ளத்தை விட்டும், திருப்தி கொள்ளா ஆன்மாவை விட்டும், ஏற்றுக் கொள்ளப்படாத பிரார்த்தனையை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (ஸஹீஹ் முஸ்லிம்)

اَللّٰهُمَّ اهْدِنِيْ وَسَدِّدْنِيْ اَللّٰهُمَّ اِنِّيْ اَسْاَلُكَ

الْهُدَىٰ وَالسَّدَادَ

52. அல்லாஹ்வே! எனக்கு நேர்வழி காட்டு! என்னை நேர்மையாளனாக ஆக்கு! அல்லாஹ்வே... நிச்சயமாக நான் நேர்வழியையும் நேர்மையையும் உன்னிடமே கேட்கிறேன்.

(ஸஹீஹ் முஸ்லிம்)

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُ بِكَ مِنْ زَوَالِ نِعْمَتِكَ

وَتَحَوُّلِ عَافِيَتِكَ وَفُجَاءَةِ نِقْمَتِكَ

وَجَمِيْعِ سَخَطِكَ

53. அல்லாஹ்வே! நீ (எனக்குச்) செய்த அருள் (என்னிடமிருந்து) நீங்குவதை விட்டும். நீ வழங்கிய பரிபூரண சுகம் அகன்று விடுவதை விட்டும். திடீரென நீ தண்டிப்பதை விட்டும். உனது எல்லா

விதமான கோபத்தை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

(ஸஹீஹ் முஸ்லிம்)

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا عَمِلْتُ

وَمِنْ شَرِّ مَا لَمْ اَعْمَلْ

54. அல்லாஹ்வே! நான் செய்த செயல்களால் ஏற்படும் தீங்கை விட்டும், நான் செய்யாத செயல்களால் ஏற்படும் தீங்கை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

(ஸஹீஹ் முஸ்லிம்)

اَللّٰهُمَّ اَكْثِرْ مَالِيْ وَوَلَدِيْ وَبَارِكْ لِيْ فِيْمَا

اَعْطَيْتَنِيْ وَاَطِلْ حَيَاتِيْ عَلٰى طَاعَتِكَ

وَاَحْسِنْ عَمَلِيْ وَاغْفِرْلِيْ

55. அல்லாஹ்வே! என் செல்வத்தையும், என் சந்ததியையும் அதிகப்படுத்து! நீ எனக்கு கொடுத்தவற்றில் பரக்கத்தை ஏற்படுத்து! உனது வணக்க வழிபாட்டில் எனக்கு நீண்ட வாழ்க்கையைத் தா! என் அமல்களை அழகுபடுத்து! என்னை மன்னித்துவிடு!

(ஸஹீஹுல் புகாரி, அல்அதபுல் முஃப்ரத்)

لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ الْعَظِيْمُ الْحَلِيْمُ لَا اِلٰهَ اِلَّا

اللّٰهُ رَبُّ الْعَرْشِ الْعَظِيْمِ لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ

رَبُّ السَّمَاوَاتِ وَرَبُّ الْاَرْضِ وَرَبُّ

## الْعَرْشِ الْكَرِيْمِ

56. மகத்துவமிக்க, சகிப்புத்தன்மை உடைய அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை. மகத்தான அர்ஷின் அதிபதியான அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை. வானங்களின் இறைவன். பூமியின் இறைவன். சங்கைமிகுந்த அர்ஷின் இறைவனான அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை. (ஸஹீஹுல் புகாரி)

اَللّٰهُمَّ رَحْمَتَكَ اَرْجُوْ فَلاَ تَكِلْنِيْ اِلٰى
نَفْسِيْ طَرْفَةَ عَيْنٍ وَاَصْلِحْ شَأْنِيْ كُلَّهُ لاَ

اِلَهَ اِلَّا اَنْتَ

57. அல்லாஹ்வே! உன் அருளை ஆதரவு வைக்கிறேன். கண் சிமிட்டும் நேரமளவு கூட என்னை என் பக்கம் பொறுப்பு ஒப்படைத்து விடாதே! எனது எல்லாக் காரியத்தையும் எனக்கு சீர்ப்படுத்தித் தா! உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. (ஸுனன் அபூதாவூது)

لَا اِلَهَ اِلَّا اَنْتَ سُبْحَانَكَ اِنِّي كُنْتُ مِنَ

الظَّالِمِيْنَ

58. உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. நிச்சயமாக நான் அநீதி இழைத்துக் கொண்டவர்களில்

ஒருவனாக இருக்கிறேன் (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ اِنِّيْ عَبْدُكَ اِبْنُ عَبْدِكَ اِبْنُ

اَمَتِكَ نَاصِيَتِيْ بِيَدِكَ مَاضٍ فِيَّ

حُكْمُكَ عَدْلٌ فِيَّ قَضَاؤُكَ اَسْاَلُكَ

بِكُلِّ اسْمٍ هُوَ لَكَ سَمَّيْتَ بِهِ نَفْسَكَ اَوْ

اَنْزَلْتَهُ فِيْ كِتَابِكَ اَوْ عَلَّمْتَهُ اَحَدًا مِّنْ

خَلْقِكَ اَوِ اسْتَأْثَرْتَ بِهِ فِيْ عِلْمِ الْغَيْبِ

عِنْدَكَ اَنْ تَجْعَلَ الْقُرْآنَ رَبِيْعَ قَلْبِيْ

وَنُوْرَ صَدْرِيْ وَجَلاَءَ حُزْنِيْ وَذَهَابَ هَمِّيْ

59. அல்லாஹ்வே! நிச்சயமாக நான் உனது அடிமை. உன் அடிமையின் மகன். உனது அடிமைப் பெண்ணின் மகன். என் உச்சி முடி உன் கையில்தான் இருக்கிறது. என்னில் உன் தீர்ப்பு நிறைவேறியே தீரும். என் விஷயத்தில் உனது தீர்ப்பு மிக நீதமானது. உனக்கென நீ வைத்துக் கொண்ட அல்லது உனது நூலில் கூறியிருக்கும் அல்லது உனது படைப்பினங்களில் ஒருவருக்கு நீ கற்றுக் கொடுத்திருக்கும் அல்லது உன்னிடத்தில் உள்ள மறைவான அறிவில் நீ மட்டும் தெரிந்து வைத்திருக்கும் அனைத்து பெயர்களைக் கொண்டும் உன்னிடம் நான் கேட்கிறேன். குர்ஆனை என் உள்ளத்திற்கு வசந்தமாக என் இதயத்திற்குப் பிரகாசமாக, என் கவலையை அகற்றக் கூடியதாக என் துக்கத்தை நீக்கக் கூடியதாக ஆக்கிவிடு!

(முஸ்னது அஹ்மது)

اَللّٰهُمَّ مُصَرِّفَ الْقُلُوْبِ صَرِّفْ قُلُوْبَنَا عَلٰى طَاعَتِكَ

60. உள்ளங்களைத் திருப்பக் கூடியவனே! உனக்கு வழிபடுவதின் மீது என் உள்ளத்தைத் திருப்பி வை!

(ஸஹீஹ் முஸ்லிம்)

يَا مُقَلِّبَ الْقُلُوْبِ ثَبِّتْ قَلْبِيْ عَلٰى دِيْنِكَ

61. உள்ளங்களைப் புரட்டக் கூடியவனே! உனது மார்க்கத்தின் மீது என் உள்ளத்தை நிலைப்படுத்தி வை! (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ إِنِّيْ اَسْاَلُكَ الْعَافِيَةَ فِى الدُّنْيَا وَالْاٰخِرَةِ

62. அல்லாஹ்வே! நிச்சயமாக நான் உன்னிடம் இவ்வுலகத்திலும் மறுமையிலும் பூரணச் சுகத்தைக் கேட்கிறேன்.

(ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ اَحْسِنْ عَاقِبَتَنَا فِى الْاُمُوْرِ كُلِّهَا

وَاَجِرْنَا مِنْ خِزْيِ الدُّنْيَا وَعَذَابِ الْاٰخِرَةِ

63. அல்லாஹ்வே! எல்லாக் காரியங்களிலும் எங்களது முடிவை அழகாக்கி வை! இவ்வுலகத்தின் இழிவை விட்டும், மறுவுலகத்தின் வேதனையை விட்டும் எங்களைப் பாதுகாத்துக் கொள்!

(முஸ்னது அஹ்மது)

رَبِّ اَعِنِّيْ وَلَا تُعِنْ عَلَيَّ وَانْصُرْنِيْ وَلَا

تَـنْـصُـرْ عَـلَـيَّ وَامْـكُـرْ لِيْ وَلَا تَـمْـكُـرْ عَلَيَّ

وَاهْدِنِيْ وَيَسِّـرِ الْهُدَىٰ اِلَيَّ وَانْصُرْنِيْ عَلَى

مَـنْ بَـغَـىٰ عَلَيَّ رَبِّ اجْعَلْنِيْ لَكَ شَكَّارًا

لَكَ ذَكَّـارًا لَكَ رَهَّـابًا لَكَ مِـطْـوَاعًا

اِلَيْكَ مُـخْبِتًا اَوَّاهًا مُنِيْبًا رَبِّ تَقَبَّلْ تَوْبَتِيْ

وَاغْسِـلْ حَـوْبَتِـيْ وَاَجِـبْ دَعْـوَتِيْ وَثَبِّتْ

حُـجَّتِـيْ وَاهْدِ قَلْبِيْ وَسَدِّدْ لِسَانِيْ وَاسْلُلْ

سَخِيْمَةَ قَلْبِيْ

பச. என் இறைவா... (என் எதிரிகள் விஷயத்தில்) எனக்குச் சாதகமாக உதவி செய்! எனக்கு எதிராக உதவி செய்து விடாதே! (நன்மைகளைச் செய்வதற்கு) எனக்கு உதவி செய்! எனக்கெதிராக உதவி செய்து விடாதே! எனக்குச் சாதகமாக சூழ்ச்சி செய்! எனக்கெதிராக சூழ்ச்சி செய்து விடாதே! எனக்கு நேர்வழி காட்டு! நேர்வழியை எனக்கு இலகுவாக்கிக் கொடு! என் மீது அநியாயம் செய்பவருக்கு எதிராக எனக்கு உதவி செய்! என் இறைவா... உனக்கு அதிகம் நன்றி செலுத்துபவனாக, உன்னை அதிகம் நினைப்பவனாக, உனக்கு அதிகம் பயந்தவனாக, உனக்கு அதிகம் கீழ்ப்படிந்தவனாக, அதிகம் அச்சமுடைய வனாக, உன் பக்கமே நிம்மதி கொண்டவனாக, முற்றிலும் திரும்பியவனாக என்னை ஆக்கிவிடு! என் இறைவா... எனது

பிழை பொறுப்பை ஏற்றுக் கொள்! என்னு பாவத்தைக் கழுவிவிடு! என் அழைப்புக்குப் பதில் கொடு! என் ஆதாரத்தை உறுதிப்படுத்து! என் உள்ளத்திற்கு நேர்வழி காட்டு! எனது நாவை நேர்மைப்படுத்து! என் உள்ளத்திலுள்ள குரோதத்தை நீக்கிவிடு!

(ஸுனன் அபூதாவூது)

اَللّٰهُمَّ اِنَّا نَسْاَلُکَ مِنْ خَيْرِ مَا سَاَلَکَ مِنْهُ

نَبِيُّکَ مُحَمَّدٌ ﷺ وَنَعُوْذُبِکَ مِنْ شَرِّ

مَااسْتَعَاذَ مِنْهُ نَبِيُّکَ مُحَمَّدٌ ﷺ وَاَنْتَ

الْمُسْتَعَانُ وَعَلَيْکَ الْبَلَاغُ وَلَاحَوْلَ وَلَا

قُوَّةَ اِلَّا بِاللّٰهِ

65. அல்லாஹ்வே! உன்னுடைய நபி முஹம்மது ﷺ உன்னிடம் கேட்ட நன்மையை நாங்களும் உன்னிடம் கேட்கிறோம். உன்னுடைய நபி முஹம்மது ﷺ உன்னிடம் பாதுகாப்புத் தேடிய தீமைகளை விட்டு நாங்களும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறோம். உன்னிடமே உதவி தேடப்படுகிறது. உன்னிடமே எடுத்துச் சொல்லப்படுகிறது. பாவத்தை விட்டு மீளவோ நன்மை செய்ய சக்தி பெறவோ முடியாது, அல்லாஹ்வைக் கொண்டே தவிர! (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُ بِكَ مِنْ شَرِّ سَمْعِيْ وَمِنْ شَرِّ بَصَرِيْ وَمِنْ شَرِّ لِسَانِيْ وَمِنْ شَرِّ قَلْبِيْ وَمِنْ شَرِّ مَنِيِّيْ

66. அல்லாஹ்வே! எனது செவியின் தீமையை விட்டும், எனது பார்வையின் தீமையை விட்டும், எனது நாவின் தீமையை விட்டும், எனது உள்ளத்தின் தீமையை விட்டும், எனது இந்திரியத்தின் தீமையை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُ بِكَ مِنَ الْبَرَصِ

وَالْجُنُوْنِ وَالْجُذَامِ وَمِنْ سَيِّئِ الْاَسْقَامِ

67. அல்லாஹ்வே! வெண்குஷ்டம், பைத்தியம், சொறி, மற்றும் எல்லா கெட்ட நோய்களை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُبِكَ مِنْ مُنْكَرَاتِ

الْأَخْلَاقِ وَالْأَعْمَالِ وَالْأَهْوَاءِ

68. அல்லாஹ்வே! கெட்ட குணங்கள் கெட்ட செயல்கள் கெட்ட ஆசைகள் அனைத்தையும் விட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

(ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ اِنَّكَ عَفُوٌّ كَرِيْمٌ تُحِبُّ الْعَفْوَ

فَاعْفُ عَنِّيْ

69. அல்லாஹ்வே! நிச்சயமாக நீ மன்னிப்பவன்: சங்கையாளன்: மன்னிப்பதை விரும்புகிறாய்: ஆகவே. என்னை மன்னித்துவிடு! (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْأَلُكَ فِعْلَ الْخَيْرَاتِ

وَتَـرْكَ الْـمُـنْـكَـرَاتِ وَحُبَّ الْمَسَاكِيْنِ

وَاَنْ تَـغْـفِـرَلِيْ وَتَرْحَمَنِيْ وَاِذَا اَرَدْتَ فِتْنَةَ

قَوْمٍ فَتَوَفَّنِيْ غَيْرَ مَفْتُوْنٍ وَاَسْاَلُكَ حُبَّكَ

وَحُـبَّ مَـنْ يُـحِبُّكَ وَحُبَّ عَمَلٍ يُقَرِّبُنِيْ

اِلىٰ حُبِّكَ

70. அல்லாஹ்வே! நன்மைகளைச் செய்வதற்கு, தீமைகளை விடுவதற்கு, ஏழைகளை விரும்புவதற்கு அருளை உன்னிடம் நான் கேட்கிறேன். மேலும், நீ எனக்குப் பிழை பொறுப்பைத் தா; எனக்குக் கருணை காட்டு என்றும் உன்னிடம் கேட்கிறேன். ஒரு கூட்டத்தினரை நீ

